ஸ்ரீ

# பவானி அம்மன் தேவஸ்தானம்

பெரியபாளையம், செங்கை மாவட்டம்.




# பவானி துதிப்பாடல்

விலை. 50 காசு

## முன்னுரை

### ஓம் பவானி துணை

எனது அருமை தாய்மார்களே, பெரியோர்களே, சகோதர சகோதரிகளே, உங்களுக்கு என் மனமார்ந்த வணக்கங்கள்.

உங்களுக்கு ஓர் வேண்டுகோள் !

இக்கலியுகத்தில் எதுதான் நடக்கும் என்று இல்லை. கதைகளிலும் சில காவியங்களிலும் படிப்பது போல் சில அம்சங்கள் நம் வாழ்க்கையிலும் நிகழ்கின்றன. இதனுல் ஆச்சரியப்படுவதற்கில்லை எந்தநேரத்தில் எது எப்படி நடக்கும் என்று சொல்லுவதற்கில்லை. என்று நாம் இப் புவியில் பிறந்தோமோ அன்றே நமக்கென்று சில விதிகள் இருக்கின்றன. இதன்படி நடந்தால் நம் துன்பங்கள் தீரலாம் என்று நினைக்கிறேன், பொதுவாக ஒரு குழந்தை அழுதால் தாய் தான் அணைத்துக் கொண்டு, ''என் கண்ணே உனக்கு என்ன வேண்டும்'' என்று கேட்பதோடு தனக்கு வேண்டியதையும் அவளே செய்வாள் தன் குழந்தையின் கண்ணில் கண்ணீர் வழிந்தால் அவள் பார்க்க சகிக்க மாட்டாள். தந்தையோ நிதானமாகதான் கேட்பார். ஆயினும் அன்னைக்கு இருப்பது போல் அத்தனை அன்பும் அக்கரையும் இருக்காது. இதனுல் தான் நம் பெரியோர்களும் 'தாயின் சிறத்ததோர் கோயிலும் இல்லை'

என்று சொல்லி இருக்கிறார்கள்போலும், எத்தனை துன்பங்கள் வந்தாலும் அன்னையிடம் முறையிட்டால் நம் கஷ்டங்கள் தீருவதுடன் நமக்கு நன்மைகள் பல ஏற்படும். எத்தனையோ சிக்கல்களிலும், தொல்லைகளிலும் நம் எதிரிகளின் தொந்தரவுகளிலிருந்தும் அன்னை நம்மை காப்பாற்றுவாள். எனக்கு நேர்ந்த ஓர் உண்மை சபபவத்தை நான் இங்கு கூற கடமைப்பட்டுள்ளேன்.

ஐந்து வருடங்களாக உடல் நலம் சரியில்லாமல் இருந்த எனக்கு தீராத வியாதியாய் விடுமோ என்று பயந்து கொண்டு இருந்தேன் டாக்டரும் ஒன்றும் வியாதி இல்லை என்று தீர்மானித்து விட்டார். இந்த நிலையில் ஒரு நாள் என் சொப்பனத்தில் அன்னை பவானி தோன்றி, என்னிடத வா' என்று சொல்லி விட்டு மறைந்தாள். அவ்வாறே அன்றுமுதல், மாதம் ஒரு முறை சென்று வருகிறேன். இதனால் எனக்கு இருந்த தொந்தரவுகள் மறைய தொடங்கின. பயங்கரமான சொப்பனங்களும், மரண அவஸ்தையான உடம்புவலிகளும் குறைந்தன. அளவிட முடியாய ஆனந்தமடைந்து அம்மா உன்னை புகழ்ந்து பாட முடிம் வில்லையே என்று சொல்லி அழுதேன். அதன் விளைவால் அதிகம் படித்திராத எனக்கு எழுத வேண்டும் போல் தோன்றியது உடனே அன்று முதல் எழுத ஆரம்பித்தேன்.

இது எல்லாம் தேவியின் அருள். இதில் சில பாடல்கள் தெலுங்கிலும் தமிழிலும் எழுத வருகின்றன. இப்பாடல் களில் ஒன்று அன்னை பவானியின் புகழைப் பாடும் துதிப் பாடல்கள் இந்த பாடலை உடல் உபாதைகளில் கஷ்டப் பட்டுக் கொண்டு இருந்தபோது அடிக்கடி பாடித் துதித் தேன். பிறகு அன்று முதல் இன்றுவரையில் என் கஷ்டங்கள் தீர்ந்துபூரண சுகமடைந்தேன். அப்பாடல்களை புத்தகங்களாக பிரசுரித்து அன்னையின் உத்தரவின்படி அன்னையின் திருவடிகளில் சமர்ப் பிக்கிறேன். இதன் கண்ணுறும் பக்தர்களும், அன்பர்களும் படித்து பயன் பெருவீர்களாக. இது ஓர் உண்மை சம்பவம்

## விநாயகர் துதி

ஐந்து கரத்தானை - ஆனை முகத்தானை
வேலோடு விளையாடும் வேலனின் சகோதரனை
விக்னங்கள்களையும் விநயகப் பெருமானை
பரமபதம் அருளும் பார்வதி புத்திரனை
என்னுளும் மறவாமல் நினைப்பாய் நெஞ்சே,

# தேவியின் துதி

கழுத்தில் கருக மணியும் காதில் கனகதோடும்,
கதம்பமலர் மாலையணிந்து மஞ்சள் குங்குமமும் புஸ்பம்
(தரித்து
கரத்தில் அபய முத்திரையும், பூரண சந்திரனின்
(முகப்பொலிவும்
எல்லாபுரமாளும், ஏகநாயகியே. சுயம்புவாய் அமர்ந்த
(சுமங்கலியே
தைலங்கிரிவாழும் பரமனின் மடியமர்ந்த
பவானியே நின்பாதம் போற்றி! போற்றி! போற்றி!

## பவானியின் துதிப்பாடல்கள்

''உலகத்து நாயகியே எங்கள் முத்துமாரியம்மா'' ராகம்

1 அன்புருவாய் அமர்ந்தவளே தேவிபவானியம்மா
—தேவி பவானி

ஆயிரம் கண் படைத்தவளே தேவி பவானி
இதயத்தில் வந்தமர்வாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி

4 ஈஸ்வரியே எனையாளும் தேவி பவானி
உலகாளும் உத்தமியே தேவி பவானியம்மா
—தேவி பவானி

ஊழ்வினையை அகற்றிடுவாய் தேவி பவானி

எங்கும் நிறைந்தவளே தேவி பவானியம்மா
—தேவி பவானி

8 ஏழுலகம் காப்பவளே தேவி பவானி
ஐம்புலன்கள் அடக்கி நின்றேன் தேவி பவானியம்மா
—தேவி பவானி

ஐயத்தை போக்கிடுவாய் தேவி பவானி
ஒளிவடிவால் அமர்ந்தவளே தேவி பவானியம்மா
—தேவி பவானி

12 ஓங்கார ரூபினியே தேவி பவானி
ஔஷதமாய் நின்றவளே தேவி பவானியம்மா
—தேவி பவானி

அஃது இங்கு வந்தவளே தேவி பவானி
கருணை வடிவானவளே தேவி பவானியம்மா
—தேவி பவானி

19 காத்தருள்வாய் என்நாளும் தேவி பவானி
சன்மார்க்க நாயகியே தேவி பவானியம்மா
—தேவி பவானி

சான்ஞேரை காத்திடுவாய் தேவி பவானி
துன்பங்கள் போக்கிடுவாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி

20 தூயவளே அருளரசியே தேவி பவானி
திக்கற்ஞேர் குறைதீர்ப்பாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி

தீயோரை அழிப்பவளே தேவி பவானி
குற்றங்கள் நீக்கிடுவாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி

24 குறைகளைந்து குணம் வளர்ப்பாய் தேவி பவானி
கண்கலங்கி வந்தவர்கள் தேவி பவானியம்மா
—தேவி பவானி
கவலைகளை தீர்த்திடுவாய் தேவி பவானி
பரமசிவன் பத்தினியே தேவி பவானியம்மா
—தேவி பவானி
28 பாவங்கள் போக்கிடுவாய் தேவி பவானி
அன்னையுன்னை தேடிவந்தேன் தேவி பவானியம்மா
—தேவி பவானி
ஆதரித்தருள்வாயே தேவி பவானி
திருநீற்றை அணிந்திருப்பாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி
32 தீராத வினைதீர்ப்பாய் தேவி பவானி
வினைதீர்க்கும் வித்தகியே தேவி பவானியம்மா
—தேவி பவானி
வீரத்தை கொடுப்பவளே தேவி பவானி
வேப்பிலையை அணிந்திருப்பாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி
36 வேம்புலியாய் அமர்ந்தவளே தேவி பவானி
நாடாளும் நாயகியே தேவி பவானியம்மா
—தேவி பவானி
நாராயணனின் சகோதரியே தேவி பவானி
புற்றினுள் அரவாக வாழ்வாய் பவானியம்மா
—தேவி பவானி

40 பூவையே பராசக்திதேவி பவானி
மங்களமாய் வீற்றிருப்பாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி
மாங்கல்யம் காத்திடுவாய் தேவி பவானி
பக்தர்களை காத்திடுவாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி

44 பாங்கான உத்தமியே தேவி பவானி
பரமபதம் அளித்திடுவாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி
பணிந்திட்டேன் உன் பாதம் தேவி பவானி
ஆரணி ஆற்றங்கரையில் அமர்ந்தாய் பவானியம்மா
—தேவி பவானி

48 ஆதிபராசக்தி தேவி பவானி
பெரியபாளையத்துறையும் தேவி பவானியம்மா
—தேவி பவானி
பெரியாயியாய் அமர்ந்தாய் தேவி பவானி
அங்கம் மறைந்து எங்கும் தேவி பவானி
—தேவி பவானி

52 எங்கும் உரைந்திடுவாய் தேவி பவானி
உலகத்து மக்களிடம் தேவி பவானியம்மா
—தேவி பவானி
ஒழுக்கத்தை உணர்த்திடுவாய் தேவி பவானி
நல்லோரை காத்திடுவாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி

56 நன்மைகளை செய்திடுவாய் தேவி பவானி
நாமம் ஆயிரம் படைத்தாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி

நாகேஸ்வரி தாயே பவானியம்மா
மஞ்சள் கனி தந்து தேவி பவானியம்மா
—தேவி பவானி

60 மக்கள் பிணிதீர்த்திடுவாய் தேவி பவானி
அஞ்ஞானம் போக்கிடுவாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி

அறிவை வளர்த்திடுவாய் தேவி பவானி
எவ்லாபுரம் உறைபவளே தேவி பாவனியம்மா
—தேவி பவானி

64 எல்லாம் அறிந்தவளே தேவி பவானியம்மா
என் கடமை நான் செய்ய தேவி பவானியம்மா
—தேவி பவானி

எனக்குதவி புரிந்திடுவாய் தேவி பவானி
உன்மீது பக்தி கொண்டேன் தேவி பவானியம்மா
—தேவி பவானி

68 உன்னை இனி நான் மறவேன் தேவி பவானி
வாழ்க்கை என்னும் கடல் கடக்க தேவி பவானியம்மா
—தேவி பவானி

வந்து துணை நீ புரிவாய் தேவி பவானி
நிலை இல்லா இவ்வாழ்வை தேவி பவானியம்மா
—தேவி பவானி

72 நினைத்தாலே நடுங்கிடுதே தேவி பவானி
கருமைநிறம் கொண்டவளே தேவி பவானியம்மா
—தேவி பவானி
கடைக்கண்ணால் பார்த்தருளும் தேவி பவானி
ஏகஸ்வரூபியே தேவி பவானியம்மா
—தேவி பவானி
76 ஏழை எனக்கருள்வாய் தேவி பவானி
நல்லறிவு பக்திஞானம் தேவி பவானியம்மா
—தேவி பவானி
நாளும் நான் பெறவேண்டும் தேவி பவானி
திங்கள் மும்மாரிபெய்ய தேவி பவானியம்மா
—தேவி பவானி
80 திருவருளை நாடுகின்றேன் தேவி பவானி
அகமுருகி பாடுகின்றேன் தேவி பவானியம்மா
—தேவி பவானி
அன்புடனே எனக்கருள்வாய் தேவி பவானி
ஆசை, பயம், கோபம், பொய் தேவி பவானியம்மா
—தேவி பவானி
84 அகன்றிடவே அருள்புரிவாய் தேவி பவானி
உலகம் செழித்திடவே தேவி பவானியம்மா
—தேவி பவானி
உத்தமியே அருள்புரிவாய் தேவி பவானி
எல்லை இல்லா உன் கருணை தேவி பவானிபம்மா
—தேவி பவானி
88 எல்லோர்க்கும் பொழிந்திடுவாய் தேவி பவானி
வேதங்கள் தழைத்திடவே தேவி பவானியம்மா
—தேவி பவானி
வேண்டும் தரம் தந்திடுவாய் தேவி பவானி
புவனங்கள் காப்பவளே தேவி பவானியம்மா
—தேவி பவானி

92 புவனேஸ்வரி தாயே தேவி பவானி
எங்கள் குல நாயகியே தேவி பவானியம்மா
—தேவி பவானி
என்னாளும் காத்திடுவாய் தேவி பவானி
அறத்தை வளர்த்திடுவாய் தேவி பவானியம்மா
—தேவி பவானி
96 அரவுடனே நிற்பவளே தேவி பவானி
மூவர்க்கு முதல்வளே தேவி பவானியம்மா
—தேவி பவானி
முக்கண்ணன் பத்தினியே தேவி பவானி
அண்டமெல்லாம் ஆள்பவளே தேவி பவானியம்மா
100 அனந்த ரூபினியே தேவி பவானி
சந்திரபிறை தரித்தவளே தேவி பவானியம்மா
—தேவி பவானி
சந்திரன் போல் குளிர்ந்தவளே தேவி பவானி
நேசமுடன் நெஞ்சுருகி தேவி பவானியம்மா
—தேவி பவானி
104 நின் புகழை பாடுகின்றேன் தேவி பவானி
வாழிய நின் திருநாமம் தேவி பவானியம்மா
—தேவி பவானி
வாழிய நின் புகழ்யாவும் தேவி பவானி
வாழிய இவ்வுலகனைத்தும் தேவி பவானியம்மா
—தேவி பவானி
108 வாழ்ந்திடுக நலம் யார்க்கும் தேவி பவானி
ஸ்ரீ பவானியின் திருவடிகளே சரணம் சரணம்
பொங்கும் மங்களம எங்கும் தங்குக

சுபம்

**பி. எஸ். சேதுரத்தினம்**
பரம்பரை மேலாளும் அரங்காவலர்